[15th March 1961

(இ) அப்படியானால், அதன்மீது சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் யாது?

THE HON. SRI P. KAKKAN : (அ) Yes, Sir.

(இ) The cost of the bridge work is estimated at Rs. 16·50 lakhs. The Government of India were addressed for their approval for taking up the work under economic and Inter-State Importance Scheme in 1960–61 but they have not agreed to the proposal.

MR. SPEAKER : As the Hon. Home Minister has not yet come, his questions may be taken up when he comes.

**Short Notice Question.**

*Women Welfare Department (Retrenchment)*

MR. SPEAKER : The Hon. Minister for Finance has come. We shall take up Question No. 7.

* 7 *S.N.Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) சமுதாய நலத்திட்டப் பகுதிகளில் மாதர் நல இலாகாவில் வேலை செய்பவர்களை 1—4—61-ந் தேதியிலிருந்து வேலையிலிருந்து நீக்கப்படும் என்று நோட்டீஸ் கொடுத்திருப்பது உண்மையா?

(இ) அப்படியாயின், அதனால் பாதிக்கப்படுபவர்கள் எத்தனை பேர்?

(உ) இவர்களுக்கு வேறு வேலை கொடுக்கும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) No, Sir.

(இ) & (உ) Do not arise.

SRI S. M. ANNAMALAI : சமுதாயநலத் திட்டப் பகுதியில் உள்ள மாதர் நல இலாகா மத்திய சர்க்காரால் நடத்தப்படுவதால், இந்த இலாகாவை கலைத்துவிடவேண்டுமென்று தகவல் தெரிவித்தார்களா? அப்படியென்றால் மத்திய சர்க்காரை நமது சர்க்கார் கலந்து ஆலோசித்ததா?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் அவர்கள் வேறு விஷயத்தைப்பற்றி கேட்பதாக இருந்தால் அதைப் பற்றி நோட்டீஸ் கொடுக்கவேண்டும்.

*Rains (November 1960)*

* 834 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN :
SRI N. K. PALANISAMI :
SRI S. M. ANNAMALAI :
SRI A. VEDARATHNAM :
SRI T. S. RAMASWAMI :
SRI A. A. RASHEED :
SRI T. T. DANIEL :
SRI N. R. THIAGARAJAN :
SRI K. VINAYAKAM:
SRI M. KALYANASUNDARAM :
} கனம் ரெவின்யூ

15th March 1961]

அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) 1960-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் பெய்த மழையின் காரணமாக எவ்வளவு மதிப்புடைய சொத்து நஷ்டம்?

(இ) உயிர் சேதம் எவ்வளவு, ஜில்லா வாரியாக?

(உ) சர்க்கார் இதற்காக எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன?

(எ) மத்திய சர்க்கார் உதவி ஏதாவது கிடைத்ததா?

THE HON. SRI. M. A. MANICKAVELU: (அ), (இ) & (உ)—
A statement [a] of damages caused by the heavy rains in November 1960, the number of lives lost and the relief measures undertaken in the various districts in the State is placed on the table of the House.

(எ) No, Sir.

SRI V. K. KOTHANDARAMAN: நெல் முதலியவை பாதிக்கப் பட்ட விவசாயிகளுக்கு ரிலீப் உதவி கொடுப்பதாகச் சொல்லப் பட்டு, அப்படி கொடுப்பதற்கு கலெக்டர் அவர்களைப் போட்டிருக் கிறார்களே. அவர்கள் நிலச் சொந்தக்காரர்களுக்குத்தான் கொடுக் கிறார்கள். ஏழை விவசாயிகள் பெரிய அளவில் பாதிக்கப்பட்டி ருப்பதால் அவர்களுக்குக் கொடுக்க நடவடிக்கை எடுத்துக்கொள் வார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்வது எனக்குத் தெரியாது. இதுமாதிரி ரிலீப் கொடுக்கிற காலத்திலே யார் பாதிக்கப்பட்டிருக்கிறார்களோ அவர் களுக்குத்தான் கொடுக்கவேண்டிய பொறுப்பு அவருக்கு இருக் கிறது.

SRI S. M. ANNAMALAI: இந்த அறிக்கையிலே பார்த்தால் 23 பேர்கள் இறந்திருக்கிறார்கள். இதில் 6 பேர்கள் ராமநாதபுர மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களுக்கு மட்டும் நிவாரணம் அளிக்கப்படவிருக்கிறது. மற்ற மாவட்டத்தில் இறந்தவர்களுக்கு ஏன் நிவாரணம் தரவில்லை. அதையும் பரிசீலிப்பார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: பரிசீலனை செய்து யாருக்குக் கொடுக்கப்படவேண்டுமோ அவருக்குக் கொடுக்கப் படுகிறது.

SRI A. VEDARATHNAM: மேஜைமீது வைக்கப்பட்டிருக் கின்ற அறிக்கையிலே ஆறுகளின் உடைப்புகள் சம்பந்தமாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. மாயவரம், நன்னிலம் தாலுக்காக் களைப்பற்றி குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் கனம் மின்சார அமைச்சரும், மராமத்து இலாகா அமைச்சர் அவர்களும்

[a] Printed as Appendix I on pages 570–577 infra.

அங்கெல்லாம் வந்து பார்த்துவிட்டுச் சென்றுர்கள். அதைப்பற்றி ஒன்றுமே குறிப்பிடப்படவில்லை. ஸ்தலத்தில் நடந்த விவரங்களைப் பற்றி சரியாகக் குறிப்பிடவில்லை. இந்த உடைப்பை. . . . . .

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் அவர்கள் கேள்வி கேட்க வேண்டுமே தவிர நடந்தவைகளையெல்லாம் சொல்லிக்கொண்டே போகக்கூடாது. இந்தக் கேள்வியை 10 அங்கத்தினர்கள் கேட்டிருக்கிருர்கள். ஒவ்வொரு அங்கத்தினரும் இதுமாதிரி பேசிக் கொண்டே போனுல் எங்கு நேரம் இருக்கிறது. ஆகையால் நடந்தவைகளை விவரமாகச் சொல்லாமல், கேள்வியை மட்டும் கேட்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI A. VEDARATHNAM : ஆறுகள் உடைப்பைப்பற்றி குறிப்பிடாமல் இருக்கிறதே என்று அதை விவரித்து பேச இருந்தேன். தலைவர் விரும்பவில்லையாதலால், விவரம் ஏன் குறிப்பிடப் படவில்லை என்பது தயவுசெய்து அறிவிக்கப்படுமோ ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதிலே பலவிதம் இருக்கிறது. இப்பொழுது கொடுக்கப்பட்டிருக்கும் அறிக்கையிலே கொஞ்சம் அதிகமாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதற்கே 8 பக்கங்கள் ஆகிறது. இது குறைவு என்று கனம் அங்கத்தினர் சொன்னுல், அவர்கள் சொல்கிற பிரகாரம் எல்லாம் குறிப்பிட்டால் 50, 60 பக்கங்கள் ஆகும். இந்த உடைப்புகளை மூடுவதற்கான நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுகிறது.

SRI A. A. RASHEED : Sir, from the statement placed on the table of the House, it is seen that more than 9,000 huts have been damaged and more than 25,000 people have been affected, but the cash grant paid is only Rs. 1,50,000, which is only a pittance. Will the Government consider to increase the cash grant relief to the affected people?

THE HON. SRI M. A. MANICKAVELU : The help is given only to the very deserving people. For houses fully destroyed Rs. 30, partially destroyed Rs. 15 and clothing grant Rs. 10. We can help only very poor and we cannot help everyone who is affected.

SRI N. R. THIAGARAJAN : திண்டுக்கல், பெரியகுளம், நிலக்கோட்டை, பழனி முதலிய இடங்களில் மதில் சுவர்கள் இடிந்து போய்விட்டன என்று சொல்கிருர்கள். அவைகள் சரியாக மதிப்பிடப்பட்டு பணம் வினியோகிக்கப்பட்டதா ? என்னுடைய தொகுதியைச் சேர்ந்த அல்லி நகரத்திலே இம்மாதிரியாக சுவர்கள் இடிந்து மனித உயிருக்கு நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. இவைகளைப் பரிசீலனை செய்து மதிப்பிட்டு நிவாரணம் அளிக்கப்படுமா ? இனி இம்மாதிரி ஏற்படாமல் செய்வதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் சொன்னதுபோல் கலெக்டர் எப்படி எஸ்டிமேட் போடுகிருர்களோ, அந்த அடிப்படையில்தான் கொடுக்கமுடியும்.

15th March 1961]

SRI T. T. DANIEL: Sir, from the report I find that one person died due to fall of the mud wall in his house in Kanyakumari district. May I know, Sir, whether any relief was given to the deceased family?

THE HON. SRI M. A. MANICKAVELU: I want notice, Sir. I have no information.

SRI M. A. B. ARUMUGHASAMY: இந்த மழையினால் மதுரை ஜில்லாவிலுள்ள ஐயம்பாளையத்தில் பெரும் உடைப்பு ஏற்பட்டு விளை நிலங்களுக்கு பெரும் சேதம் ஏற்பட்டதைப்பற்றி எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன?

MR. SPEAKER: மதுரை ஜில்லாவைப்பற்றி வரும்போது இந்தக் கேள்வியைக் கேட்கலாம்.

SRI J. MATHA GOWDER: மேஜைமீது வைக்கப்பட்டிருக்கிற அறிக்கையில் நீலகிரி ஜில்லாவில் கோத்தகிரியில் ஆக்கல் என்ற ஆதிவாசிகள் கிராமத்தில் மழை பெய்து பூமி இரண்டாகப் பிளந்து விட்டதென்று அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஜியாலஜிஸ்டை அனுப்பியிருப்பதாக கலெக்டர் ரிப்போர்ட் கொடுத்திருப்பதாகத் தெரியப்படுத்தப்பட்டிருக்கிறது. அவர்களின் ரிப்போர்ட் வந்து விட்டதா, அப்படியானால் அவர்கள் என்ன கூறியிருக்கிறார்கள்? அடுத்த மழை ஸீஸன் ஆரம்பிப்பதற்கு முன்னாலே அங்கே பந்தோபஸ்து செய்துகொடுக்கப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: வந்ததாக தெரியவில்லை; வந்த பிற்பாடு சொல்லலாம்.

SRI V. K. KOTHANDARAMAN: மழையால் நாசமடைந்த ஏரி, குளங்கள் முதலியவைகளை உடனடியாக, ஒரு விசேஷ திட்டமாகக் கருதி அதற்காக விசேஷ தொகையும் ஒதுக்கப்பட்டு மராமத்து செய்வதற்கு ஏற்பாடு செய்யப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: விசேஷமோ, விசேஷமில்லையோ உடைப்புகளை மூட ஏற்பாடு செய்யப்படுகிறது.

SRI A. A. RASHEED: May I know whether the Government have any information regarding the number of huts reconstructed and the number of persons rehabilitated after this damage?

THE HON. SRI M. A. MANICKAVELU: I have said that help was given in the matter of building huts. Naturally, they must have put up the houses with the money as they will have to live. I should think that they must have put up their habitation and been living there.

SRI A. VEDARATHNAM: வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளிலிருந்து நில வரி வஜா கோரி, கடன் ஒத்தி வைப்பு செய்யவேண்டுமென்று கோரி, விண்ணப்பங்கள் வந்திருக்கின்றனவா? அதன்பேரில் என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU : சிலயிடங்களிருந்து அப்படி வந்திருக்கிறது. எங்கு அத்தியாவசியமாக கொடுக்க வேண்டுமோ அங்கு கொடுக்கலாம் என்பது உத்தேசம். கலெக்டர் களிடமிருந்து ரிப்போர்ட்கள் வந்துகொண்டிருக்கின்றன. அவ்வப் போது நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன.

* 835 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN (on behalf of SRI T. S. RAMASWAMI) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the total amount of compensation paid to the hut dwellers who sustained loss during the floods of November in Madurai district;

(*b*) compensation per person; and

(*c*) the number of persons to whom compensation was paid?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*c*) The attention of that hon. Member is invited to the statement placed on the table of the House in reply to Question No. 834.

(*b*) The quantum of relief to the affected families is left to the discretion of the Collector subject to a maximum cash grant of Rs. 30 and a clothing grant of Rs. 10.

* 836 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN (on behalf of SRI T. S. RAMASWAMI) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number of families rendered homeless in Chunampet area in the Chingleput district due to the recent rains; and

(*b*) the nature of relief given to them?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) 2,705.

(*b*) A cash grant of Rs. 33,290 was sanctioned to the people affected by the floods. The affected people were also fed at Government cost.

* 837 *Q.*—SRI N. K. PALANISAMI : SRI T. T. DANIEL : } Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the nature of the damage caused by the recent rains in the Chingleput district;

(*b*) the total estimated loss;

(*c*) how many acres of land under cultivation were affected; and

(*d*) the nature of relief given to the ryots?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The time and labour involved in gathering the particulars will not be commensurate with the result.